# விஞ்ஞான பைரவம்

## அச்சம் தெளிதல்

தமிழில்: ஸ்ரீ ஸ்ரீ வேதானந்த




**இது ஒரு தந்திர சாஸ்திர நூல். மிகப் பழமையான இந்த நூல் 112 தியான நுட்பங்களை உள்ளடக்கியது.**

**நூலைப் பற்றி:**

**பெயர்** : **விஞ்ஞான பைரவம்**

**வகை** : **தந்திர சாஸ்திர நூல்**

**மொழி** : **தமிழ்**

**மூல நூல்** : **ஆதிசிவன் தந்த ருத்திர யாமளம்**

**தமிழாக்கம்** : **ஸ்ரீ.ஸ்ரீ. வேதானந்த**

**பக்கங்கள்** : **30 A4 size**

**விலை** : **சிரத்தையுடன் படித்தல்**



http://sknathan12.wix.com/vedaspark

www.vedaspark.weebly.com

Author contact id: sknathan12@gmail.com

தேவி பேசுகிறாள்,

உருத்திர யாமளம் முழுவதும் கேட்டேன்
‘த்ரிக தந்திர’மும் நான் அறிந்ததுதான்.
இருப்பினும் என் ஐயம் தீர்ந்திடவில்லை
த்ரியம்பக! தங்கள் உண்மை உருவெது?

உம்முருவா பிரபஞ்சத்தின் ஆதார ஓங்காரம்?
உண்மை உருவை உணர்ந்திட வழியென்ன?

பைரவ ஆகமத்தில் ஒன்பது வழிகளுண்டே!
த்ரிசீர பைரவ தந்திரம் தானுண்டே?
சக்தி முந்நிலை அறிந்தால் அறியலாமோ?
நாத பிந்து கலைகள் உணர்த்துமோ?

ஆதார சக்கரங்கள் ஆறில் அது தெரியுமா?
தடுக்கும் அரை நிலவு காட்டிட முடியுமா?
ஒருக்கால் சக்தியின் வேறான வடிவமா?
ஒருமையும் பன்மையும் ஒன்றாகக்கூடுமா?

ஒருமையா பன்முகமா உன் தன்மை?
ஒருமைக்கு மாறல்லவா பன்மை?
ஒருமையில் பேதங்கள் ஒன்றுதல் எங்ஙனம்?
அருள்வீர் ஐயனே என் ஐயம் அழிந்திட

பைரவர் உரை செய்தார்,

நன்றுரைத்தாய் நாயகியே! தந்திரத்தின் சாரமிது.
ஐயம் அகன்றிடவே தந்திர மறைப்பொருளை -
பைரவ உருவென பாரோர் உரைப்பதை -
செவ்வனே உரைப்பேன் செவிமடுப்பாயே!.

பைரவத்தின் சகர தத்வம் பயனற்ற கானல் நீர்.
ஆத்ம சாதனைக்கு அணுவளவும் பயனில்லை.
இந்திர கந்தர்வர் ஜாலத்தை ஒத்தது அது.

நுட்பமற்ற புத்திக்கும், சலனமுற்ற மனதுக்கும்,
தியானத்தில் திளைக்க – செயல்களைத்தான் நாடும்
வீணருக்கானதது

பைரவத்தின் உருவம் ஒன்பது வடிவிலில்லை,
அக்ஷ ரங்கள் எதிலுமில்லை
த்ரி சீர பைரவமும் சக்தி முந்நிலையுமல்ல.
நாதமும் பிந்துவும் அவ்வுரு காட்டாது

தடையாகும் அரைநிலவும் தன்மை உணர்த்தாது
ஆதார சக்கரங்கள் ஆறை துளைத்தாலும்
சக்தியதும் சத்தியத்தை காட்டிட வொண்ணாதே

தாயும் குழந்தைக்கு சோறூட்ட சொல்லும் கதை
போலும் பைரவ உருவத்தின் வர்ணணைகள்
சடங்குகள் பலவும் முதிர்வற்ற மாந்தர்தமை
சத்திய தரிசனத்திற்கு ஈர்க்கும் இனிப்புகள்.

சித்தம் அடங்கிய சித்தர் தமக்குள்ளே
நித்தம் முகிழ்க்கும் ஆனந்தமாகவேதான்
இரட்டைகள் கடந்த ஒருமை வடிவாக
விரியும் சராசரத்தின் முழுமையும் தானாகி
பைரவ – பைரவியின் மெய்யுரு தோன்றலாகும்.

நீர்மையே சாரமாம் நீளுலகில் பைரவர்க்கு
நீங்காது எங்கும் நிறைந்திருக்கும் தன்மையதாம்.
மேலான உண்மைத் தன்மை இதுவாக
மேவிடும் பூசனைக்குரியவர் யார்?ஏற்பவர் யார்?

உரைத்திட்ட பைரவத்தின் உண்மைத் தன்மைதனை
உள்ளத்தே உணர்ந்திட்ட உத்தம மாந்தர்
பிரபஞ்சத்தின் ஆதார சக்தியென நிற்கின்ற
பர தேவி இதுவென்று பார்த்திருப்பார்தானே

வலிவுள்ளோன் அல்லாது வலிவும் வேறாமோ
தாரணியைத் தாங்கும் தர்மமாம் பரதேவி
தர்மத்தை தன்னுடலாய் கொண்டது பைரவம்

தீயும் சுடும்தன்மையுமாய் பரதேவி பைரவமும்
ஆயின் இரண்டெண்பார் ஆரம்ப நிலைதனிலே
மெய்யறிவுப் பாதை நுழைவாயில் அதுவாகும்.

சக்தி நிலையதனில் சத்தியமாய் திளைப்பவர்கள்
தானே சிவமாய் தனை உணர்வாரே
தானே சிவமாய் தனை உணர்ந்தவர்கள்
தானே சிவமாய் அமர்ந்திருப்பாரே
இத்தகு நிலையை சித்தர்கள் அடைவதால்
சக்தியே சிவத்தின் முகவரி என்பார்

விளக்கின் ஒளியில், விரியும் கதிரில்
விளங்கி நிற்கும் திசை, வெளி, உருவம் போல்
விளங்கும் சிவமே, விளக்குதல் சக்தி!

இவ்வாறுரைத்த பைரவம் பணிந்து, தேவி உரை செய்தாள்:

தேவ தேவனே! த்ரிசூலம் தாங்கியே!
கபால மாலை உமக்கு அணிகலனாம்
காலம் வெளி திசை குண ரூபம் கடந்து நிற்கும்
கோலம் விளங்க எனக்குரைப்பீரே

எவ்வழி பைரவ நிலை உணர்ந்திடுதல்?
எவ்வழி சக்தி, சிவத்தின் முகமெனல்?
அவ்வழி நானும் தெளிந்திடும் வகையில்
செவ்விய மலரடி பைரவ, உரைப்பீர்!

பைரவர் உரைத்தார்:

காலம் கடந்து நிற்கும் பரதேவி தன்னியல்பால்
காற்றாய், ப்ராண அபானனாய் உருக்கொண்டாள்
ப்ராண அபானனின் தோற்றுவாய் தொட்டிட
பூரணத்துவம் மானிடர்க்காகுமே

உள்வெளி மூச்சை ஊன்றியே பார்த்து
திரும்பும் புள்ளியை திருத்தமாய் உணர்ந்தால்
பைரவ சாரம் வெளிப்படத் தோன்றும்
பைரவி என்றிதை பாரோர் புகல்வர்

உள்வரு மூச்சு உறைந்திடும் போதில்
உள்ளீடான சக்தி உலவாதொழிந்திட
ஆத்ம சாதகன் சாட்சியாய் நிற்க
ஆங்கே தோன்றிடும் பைரவத் திருவுரு.

உள்வெளி மூச்சின் உச்சியில் முடிவில்
புள்ளியாய்த் தெரியும் இடைவெளியதனில்
அந்த அமைதியில் பைரவம் பளிச்சிடும்
சாந்தம் என்றந்த சக்தியைப் பணிவர்

உதிக்கும் கதிரின் கிரணங்கள் போலே
ஊறிடும் சக்தி நுண்ணியதாகி
துவாதசாந்தம் தொட்டிடும் வேளை
துலங்கிடும் பைரவம் ஒன்றிடுவோர்க்கே

பன்னிரு மையம் ஒன்றன் பின் ஒன்றாய்
மின்னலைப்போலே பாய்ந்திடும் சக்தி
திண்ணிய மனதுடன் எண்ணியே நிற்க
சென்னியின் உச்சியில் பைரவம் துலங்கும்

சக்கரங்கள் பன்னிரண்டை அக்கரங்களோடேதான்
தக்கமுறை தாண்டிடவே ஆத்ம சாதகனும்
பருவுடலின் எல்லைகளைப் படிப்படியாய்
தானிழப்பான்
கருப்பொருளாம் குண்டலியும் சிவத்தோடு
கலந்திடுவாள்

புருவமத்தியை குண்டலி தொட்டிட
பருவுடல் எல்லைகள் இழக்கும் சாதகர்
சிந்தையில் ஊறிடும் எண்ணங்கள் அற்றே
விந்தை உலகில் வியாபித்திருப்பரே

மயிலிறகதனின் வண்ணங்கள் போலே
மனதின்வாயிலாம் ஐம்பொறிகளுமே
தமைத்தாமிழந்து தம்மோடொடுங்கிட
இதயத் தாமரை இனிதே புகுவாய்

எதிர்படு சுவரில், விரியும் வானில்,
மதிக்கத்தக்கோர் மகிழ்முகந்தன்னில்,
சிந்தனை விடுத்து கவனம் பதிக்க
உந்தனை நீ உணர் வரம்பெறலாமே

விழிகளை மூடி விழிப்புடன் நீயும்
விரிமயிர் கபால உச்சியை எண்ணி
எண்ணம் குவித்து இலக்கை நாடிட
திண்ணமாய் அதுவும் எதிர்படலாகும்

தாமரைத் தண்டின் நாரினை ஒத்து
தண்டுவடத்தின் மத்தியில் ஓடும்
சுஷ{ம்னா நாடியை தியானம் செய்திட
தேவியின் அருளால் ஞானம் மலர்ந்திடும்

விரல்களால் முகமதன் பொறிகளை மூடிட
பரவெளி பிந்துவும் நெற்றியில் ஒளிரும்.
ஆத்ம சாதகன் ஆங்கே லயிக்க
ஆதார சக்தி வெளிப்படலாகும்.

கபால உச்சியில், புருவமத்தியில்,
காணாதொளிர் சுடர் திலகம் போலே
தியானம் செய்திட நடுக்குறும் மனமும்
திளைத்தலும் ஒடுங்கலும் மறைதலுமாமே

ஓய்விலாதோடும் நதியினைப்போலே
தொய்விலாதொலிக்கும் பிறவாப் பேரொலி
உய்த்ததில் உள்ளம் தோய்ந்திடும் மாந்தர்
உயரிய பிரம்ம நிலையடைவாரே

பிரணவ மந்திரம் முறைப்படி ஜபித்து
பிறழாதிடைபடும் அமைதியில் மூழ்க
சிவனிலை அடைவார், பைரவி – அவர்க்கு
சிவனிலை தானே சித்திக்கலாகும்.

ஓங்காரத்தின் ஒவ்வோர் ஒலியிலும்
ஆங்கே அமைதியைக் காணும் சாதகர்
பாங்காய் அமைதியை தியானம் செய்திட
ஓங்கிடும் பேரமைதியில் உறைவார்.

ஒலிக்கும் கருவிகள் ஒலியின் இடையில்
ஒலிக்கும அடிநாதம் அவதானித்து
ஒருமித்த கவனம் இருத்தி நிலைத்திட
பெருவெளியாகும் அவர்தம் உடலே!

வித்தாம் ஓமெனும் ஒரு மந்திரத்தில்
விரியும் ஒலிகளை முறையாய் ஒலித்து
விளங்கும் அமைதியை தியானம் செய்திட
வியனுலகதனில் சிவமாய் நிலைப்பரே

திசைகள் யாவும் தன்னுடை உடலில்
இசைந்தே வெளியாய், சூன்யம் தானாய்
இருப்பதாய் பாவிக்க அவர்தம் மனமும்
இருப்பது இழந்து இயல்பாய் மறையுமே

தண்டு வடத்தின் கீழ்முனையதிலும்
மண்டை உச்சியின் மயிர்பிரி முனையிலும்
வெளியை தியானிக்க வெளியாகும் மனமும்
வெற்றுடலும் பர சக்தியால் நிரம்பும்

மூலாதாரமும் மண்டையுச்சியும்
ஏழாதாரத்திடை இதயச் சக்கரமும்
வெளியாய் தியானித்து நிலைபெற்றிடவே
துளியும் அசைவிலா தடங்கிடும் மனமே

ஒருப்பட்ட மனதால் பருவுடல் தன்னை
ஒன்றுமிலா வெளி, சூன்யமாய் எண்ணி
ஒரு கணமேனும் பிரிவற்றிருந்தால்
உருப்படும் சூன்யமும் அதுவே பைரவம்

விளங்கும் உடலில் உள்ள யாவிலும்
வியாபித்துள்ளது வெளி என பாவிக்க
விரிமலர்த் தாமரை ஒத்த கண்ணினாய்
விரியும் எண்ணவோட்டம் அடங்கிடும்.

உள்ளீடில்லாத வெறும் சுவர் என்றே
உடலை மூடிடும் தோல்தனை உணர்வார்
தியானிக்க ஒன்னா சூனியம் தானாய்
தியானிக்க லாகா நிலையடைவாரே

இதயத் தாமரையில் இலங்கு மந்திரம்
இருவிழி மூடியே, இயக்கம் நிறுத்தி
ஆழ்ந்து தியானிக்கும் ஆத்ம சாதகர்
ஆத்மானு பூதியின் உச்சம் தொடுவரே

எல்லாம் ஒடுங்கி – தன்னுடை உடலில்
துவாதசாந்தத்தில் மனமும் லயிக்க
உள்ளமும் உடலும் உறுதியாய் நின்றிட
தெளளென தத்துவ இலக்கும் விளங்கிடும

தவ்விடும் மனதை துவாதசாந்தத்தில்
எவ்வாறாயினும் நிலைத்திடச் செய்ய
ஒவ்வொரு நொடியும் அற்புதம் நிகழும்
செவ்விய பைரவ பொற்பதம் விளங்கும்

காலம் நகர்தலில் கடும் நெருப்பாகி
தூல உடலை எரிப்பதுவாக
தூய நல்லுள்ளத்தோடு பாவித்திடுவார்
துய்ப்பார் பேரமைதியைத் தானே

அவ்வாறாக அனைத்துலகையுமே
கவ்விடும் கால பெருநெருப்பென்றே
பாவனை செய்திடும் ஆத்ம சாதகர்
பாருலகதனில் பரமனாய் ஆவரே

தன்னுடை உடலென, வியனுலகெனவே
மன்முதல் பூதங்கள் நுண்ணுதல் வரிசையில்
திண்ணமாய் தியானிக்கும் ஆத்ம சாதகர்
பண்ணிசைப் பரதேவியைக் காண்பரே

பன்னிரு உறையுள் நண்ணிடும் சக்தி
நுண்ணியதெனவும் மண்ணியதெனவும்
எண்ணியே இதயத் தாமரைப் புகுவார்
தன்னிறைவடைந்து சுதந்திரராவரே

ஞாலமெங்கிலும் காணும் பொருளெலாம்
காலத்தால் வந்த வகையது தேர்ந்து
தூல சூக்கும பர வடிவோர்ந்திட
மேலாம் அமைதியில் கரைந்திடும் மனமே

புவனம் எங்கிலும் உள்ளது யாவிலும்
சிவத்தின் தன்மையே விளங்கக் காண்பவர்
தவத்தின் உச்ச நிலைதனை அடைவார்
சிவனருள் தானே சித்திக்கலாகுமே

சூழும் புவியை சூன்யமாய் எண்ணி
ஆழ்ந்து தியானிக்கும் ஆத்ம சாதகர்
பாழும் மனதையும் பாங்காய் கரைத்திட
வாழும் பொழுதே பரத்தில் கலப்பரே

பாண்டத்தினுள்ளே பரவிடும் வெளியை
பாண்டத்தை விலக்கி பார்த்திருப்பவர்க்கு
பாண்டத்தைப் போலே பாழும் மனமும்
மாண்டிடத் தோன்றிடும் பரநிலை தானே

தாவரமில்லா நிலத்தில் பார்வை பதித்திட
ஆதாரமில்லாமல் மனமும் செயலிழக்கும்
சேதாரம் ஆகிடும் கற்பனைக் கனவுகள்
ஆதார சக்தியோடு ஒன்றுதல் ஆகும்

இரட்டைகள் இரண்டு இறக்கைகளாகி
இயங்கிடும் இதய இயக்கம் நிறுத்தி
இரட்டைகள் நடுவே இதந்தரும் மையம்
இனிதே நின்றிட பைரவம் விளங்கும்.

அசைவது நிறுத்தி ஒன்றன் மீதே
அசையா பாவனை தன்னில் தங்கிட
அத்தகு பாவனை மத்தியில் மலர்ந்திடும்
வித்தென விளங்கும் பைரவம் தானே

வியனுலகிதுவும் விளங்கிடும் உடலும்
விரிந்திடும் பிரபஞ்சமும் வழிப்புணர்வன்றி
வேறொன்றில்லை என்றே தெளிந்திட
வேத முதலும் விளங்கிடலாகும்

பிராண அபானன் - உள்ளோ புறமோ
பிணைந்திடும் போதில் பிறழாதிருந்து
சமத்தன்மையினை உணர்ந்திடும் யோகி
அமரத்துவத்தின் அடி தொடுவாரே

ஆங்கவர் உடலும் திகழும் பிரபஞ்சமும்
ஆனந்தத்தால் நிறைந்தது என்றே
ஆழ்ந்து பாவிக்கும் ஆத்ம சாதகர்
ஆனந்தமதனில் ஆழ்ந்திருப்பாரே

மதச்சடங்குகளை மனமொப்பிச் செய்ய
இதயத்தில் பேரானந்தம் பெருகும்
பதமாய்ப் பேருண்மையும் ஒளிரும்

அறிவுப் பொறிகளை அடைத்திடுவதனால்
செறிவடையும் சக்தி மெல்ல மேலேறும்
எறும்பு ஊர்வது போல் அதனை உணர்ந்து
பேரானந்தம் தனை அடைவாரே

சித்த சுகத்தை விஷமெனக் கருதி
சுத்த மெய்ஞான நெருப்பில் இட்டிட
வாயுவோ மனமோ நிரம்பிய உடலொடு
தோய்வர் தெய்வீக பேரானந்தத்தோடு

சக்தியின் தொடுதலால் திகைப்பு மேவிடும்
சக்தியில் கலந்தே சுகமடைந்திடுவர்
உணர்ந்திடும் அச்சுகம் பிரம்மத்தின் தன்மை
உண்மையில் அதுவே மெய் மானிடத் தன்மை

ஞாலத்தில் வாய்த்திடும் பெண்சுகந் தனிலும்
ஞானத்தின் ஆனந்தம் பன்மடங்காகும்
தேவியின் நிலையில் தெய்வத்தைத் தொடுவார்
மேவிடும் ஆனந்த வெள்ளத்தில் படுவார்

சுற்றமும் நட்பும் நெருங்கிடும் போது
பற்றிடும் இன்பத்தை உற்று நோக்கியே
ஒன்றிடும் மனதை ஒருநிலைப் படுத்த
தோன்றிடும் ஞான சமநிலை தானே
உண்ணும் சுகமும், பருகிடும் சுகமும்
மண்ணும் சுவையின் சுகமதன் மேலும்
எண்ணங்களற்றே மனமும் நின்றிட
தன்னிறைவாகி தெளிவடைவாரே

இசையில், நாத – கீதந்தன்னில்
இசைந்தே தன்னை இழக்கும் யோகி
இசையின் தளத்திற்குயர்வடைந்திடுவார்
இசைவதனாவே இறைநிலை யடைவார்

எங்கெங்கெல்லாம் எண்ணம் நிலைக்குமோ
எங்கெங்கெல்லாம் தன்னிலை மறக்குமோ
எங்கெங்கெல்லாம் நிறைவு தழுவுமோ
அங்கெங்கெல்லாம் பேரானந்தந் தாமே

நித்திரை நம்மை தழுவிடும் நேரம்
இத்தரை எண்ணம் மறைந்திடும் நேரம்
முத்தன்மைவிட்டு மனம் விலகிடும் காலம்
சித்திக்கும் பரதேவி அவளது கோலம்

ஞாலத்தில் பதியும் சூரியக்கதிர்கள்
ஜாலத்தில் வெளியும் காட்டிடும் உருவம்
கோலத்தில் பார்வை கருத்தும் பதிந்திட
மூல ஆத்ம ரூபம் பளிச்சிடும்

பரவொலி யதனைக் கேட்டிடும் காலம்
கரங்கிணி க்ரோதினி பைரவி லேலிஹானி
கேச்சரித் தன்மைகள் தன்னுள் வெளிப்படும்
பேச்சிழந்திடவே பெருநிலை வசப்படும்

உடலின் மத்தியை மிருதுவாய் கிடத்தி
கரமும் காலும் காற்றில் மிதந்திட
உறுநிலை யதனில் உறுதியாய் நின்றிட
பீறிடும் ஞானம் முழுமையதாகும்

முறைப்படி அமர்ந்தே கரங்களை புஜத்தை
முன்னால் வளைத்தே வட்டமதாக்கி
வட்டத்துள் மனதை திட்டமாய் செலுத்த
திட்டமாய் மனமும் அமைதியில் லயிக்கும்

பொருளின் உருவில் பார்வையை பதித்து
இமைக்காதிந்த நிலையில் நிற்க
எண்ணங்களற்றே மனமும் மறைந்திடும்
தின்னமாய் சிவமாம் ஆனந்தம் மலர்ந்திடும்

நாவின் நடுவில் பொருளை வைத்தே
வாய் திறந்திருக்க மனதைப் பொருளில்
ஆழமாய் பதித்து ஹாவென்றொலிக்க
ஆனந்த சிவநிலை அடைந்திடுவாரே

அமர்ந்தோ கிடந்தோ அயர்ந்திருக்கையிலே
ஆதரவற்றுடல் மிதப்பதாய் பாவிக்க
நொடிப்பதோர் போதில் பதிவுகளழிந்திடும்
நொடியதில் நெடுநாள் வினைத்தொடர் அழிந்திடும்

உடலதும் இயல்பாய் குலுங்கிட, அசைந்திட
திடமதுவாக சமநிலை வாய்க்கும்
தேவி, இந்நிலை அடைந்திடும் மாந்தர்
தெவிட்டா இறைநிலை நதியினில் கலப்பர்

விரிந்திடும் நிர்மல வானமதனில்
விழியிமைக்காது பார்வை பதித்தே
பைரவி, கவனம் கலையாதிருந்திட
பைரவம் தானே விளங்குதலாகும்

படர்ந்திடும் வானம் பைரவம் என்றே
பாவித்திருக்க பிரபஞ்சம் முழுதுமே
புருவமத்தியில் ஒன்றிடக் காண்பார்
புனிதப் பேரொளி புகுதலுமாகும்

இரட்டைகள் இருப்பை, இருட்டை, ஒளியை
இவ்வுலகினிலே உணர்ந்திடும் மாந்தர்
பைரவ ரூபமே யாவும் என்பதை
ஐயமின்றி அகத்தில் உணர்வார்

தேய்பிறைக் காலம் ஆரிருள் தன்னில்,
பேயுலாவம் இரவின் மத்தியில்,
பைரவத் தன்மையில் கலந்திட விழைவார்
பைரவ ரூபத்தை பாவித் திருப்பார்.

இமைகள் மூடி கவிழ்ந்திடும் இருளில்
அமைதியாய் பைரவத் தன்மையை பாவிக்க
பைரவத் தன்னையில் ஒன்றிடலாகும்

யாதொரு புலனை முழுவதும் அடக்கி
யாதொன்றுமில்லா சூன்யமாய் நிறுத்த
அத்தகு நொடியில் அப்புலனறிவாய்
ஆத்மா என்னும் சுயமும் ஒளிர்ந்திடும்

ஓங்காரத்தின் உட்பிரிவுகளில்
உகாரமும் மகாரமும் விலக்கியே வைத்து
அகாரமதனை செபிப்பவர் தமக்கு
அழிவிலா முதற்பொருள் ஞானம் விளங்கும்

விஸர்க்கமாம் மகார ஒலிதனை சேர்வார்
விஸர்க்க முடிவின் அமைதியில் ஆழ்வார்
ஆதரவற்ற அமைதியில் மனமும் நின்றிட
அதாரமான ப்ரஹ்மம் விளங்கிடும்

தன்னுடை சுயத்தை எங்கும் நிறைந்ததாய்
தன்னுள் தியானிக்கும் ஆத்ம சாதகன்
தன்னுடை மனமும் இயக்கமற்று நின்றிட
தன்னுள் ஆத்ம சக்தியைக் காண்பான்.

ஊசியின் முனையால் தன்னுடை உடலில்
ஊறு செய்தே ஊறிடும் வலியில்
ஊன்றியே கவனம் நாட்டிடும் சாதகர்
உன்மை பைரவத் தன்மையை உணர்வார்

எண்ணங்கள் தமக்கு செயலுரு தந்திடும்
யாதொரு பொறியும் இன்மையை பாவிக்க
எண்ணங்களற்றே மனமும் அழிந்திடும்
உன்னத நிலையாம் ஞானம் முகிழ்க்கும்

பிரம்மம் தன்னுரு பெயரும் மாறி
பலவாய் தோன்றிட மாயையே காரணம்
பலமாய் இதனை பற்றிடும் சாதகர்
பிரம்மமே தானெனும் உண்மையைத் தெளிவார்

எழுந்திடும் எண்ணங்கள் அழிந்திடும் வழியை
விழிப்புடன் காண எண்ணங்களற்றே
எண்ணங்கள் தோன்றிடும் மூலத்தினுள்ளே
எண்ணத் தொகுப்பாம் மனமும் மறைந்திடும்

தன்மனம் எழுதிடும் எண்ணங்களாலே
தன்னுடைத் தன்மை தெளியாதது உணர்ந்து
தான் யார் என்றே தேடிடும் சாதகர்
தன்னுடைத் தன்மையை உணர்ந்து மூழ்குவர்

எண்ணங்கள் மனதில் எழுந்திடும் போதில்
எண்ணத்திலேயே மனதை குவித்திட
எண்ணச்சங்கிலி கண்ணிகள் அறுந்தே
தின்னமாய் தத்துவங்கள் விளங்கிடலாகும்

மெய்யறிவல்லாது மற்றை எவ்வறிவும்
பொய்யறிவாம் என திண்ணியர் உணர்வர்
மெய்யறிவானது யாவர்க்கும் பொதுவாம்
மெய்யறிவென்பது சிவநிலை அதுவாம்

பிரபஞ்சத்தினுள்ளே உள்ளது யாவிலும்
பிரம்மமே விழிப்புணர்வாகி நிற்பது
பிரம்மத்தின் இந்நிலை தியானிக்கும் சாதகர்
பிரபஞ்சத்தின் பல்லுரு பெயரும் கடப்பார்

காமம் வெகுளி உலோபம் மோகம்
மதமாத்சர்யம் பொறாமை எனுமிவை ஆறும்
மனதினில் எழுவதை உற்றே நோக்கிட
மயக்கம் விலகியே தத்துவம் நிலைத்திடும்

பற்பல பெயரில் உருவில் உளதெலாம்
கற்பனை அல்லது மாயை யென்றோ
முற்றிலும் பொய்யாம் தோற்றம் என்றோ
பற்றி நின்றிட ஆனந்தம் பொங்கும்.

சுகத்திலும் இலாது துக்கத்திலும் நிலாது
சித்தம் தன்னில் நடுநிலை வகிப்பார்
சித்த சுத்தியால் சிவநிலை அடைந்து
தத்துவம் தனக்குள் விளங்கிடக் காண்பார்

பிரம்மம் தானென சிந்தையில் இருத்தி
பிரபஞ்சம் முழுவதும் தானெனக் கொள்வார்
பிறரெனக் கொன்டிட ஏதுமிலாமையால்
பிரம்மானந்தம் தன்னுள் உணர்வார்

மன்னின் பல்லுரு பாண்டமாதல் போல்
எண்ணங்கள் தனக்குள் முகிழ்வதை பாவிக்க
மன்னுலகனைத்தும் தானாய் விரிந்திடும்
பண்ணுரை பிரம்மமாய் பாரில் நிலைப்பரே

செய்வோன் செயல் செயபடு பொருளெனும்
செயலையடுத்த பிரிவினை யாவும்
சென்னியில் இருந்தால் சாதாரண மனிதர்
செயலில் ஒடுங்கின் யோகியராமே

விழிப்புணர்வாகவே தன்னை பாவித்து
விழிப்புடன் தன்னுடல் எல்லைகள் கடந்து
விழிப்புணர்வாலே பல்லுயிர் தன்மை உணர
விழிப்பதனால் எங்கும் வியாபித்தலாகும்

பைரவி, மனதின் ஆதாரம் அழிய
ஐயந்திரிபற மனமும் மாளும்
மையத்தில் நிலைக்கும் ஆத்மா தானும்
பைரவ நிலையில் பிரம்மத்தில் சேரும்

எங்கும் இருப்பவர், யாதுமானவர்
மங்கலமானவர் மகேஸ்வரர் சிவனே
தாங்களும் சிவனே உருவே வேறென
ஆழ்ந்து பாவிக்க சிவமாவர் தானே

நீரின் அலைகளும் நெருப்பின் நாவும்
விரியும் கதிரின் கிரணங்கள் போலும்
பரவும் பைரவத் தன்மையின் திவலைகள்
பிரபஞ்சத்தில் கானும் பல்லுருவங்கள்.

தன்னைத் தானே வேகமாய் சுற்றிட
தன்னுணர் வழிந்தே உடலும் சரிந்திடும்
உணர்வழிகையிலே சக்தி பெருகிடும்
உண்ணத பைரவத் தன்மை வெளிப்படும்

பிரபஞ்சத்திலுள்ள பொருட்களின் தன்மையை
கிரகிக்கும் சக்தி மனதிற்கின்மையால்
சக்தியின்மையால் எண்ணங்கள் அறுத்திட
வெற்றிடத்தில் பைரவம் துலங்கும்

கேட்பாய் தேவி, பரம்பரை அறிவை
நுட்பமாய் விரிவாய் நானுரைத்திடவே
கட்புலம் இமைக்காது பார்வை நிலைத்திட
பட்டென விரியும் கைவல்ய நிலையே

மெய்யதில் உள்ள துவாரங்கள் ஒன்பதை
கையதனாலே மூடியும் சாதகர்
மைய இதயக் கமலத்தை தியானிக்க
ஐயமில்லை பிரம்ம நிலைதனை அடைவார்

ஆழ்துளை அல்லது கினற்றின் மேலே
ஆங்கே நின்று கீழே பார்த்திட
பொங்கும் எண்ணச் சங்கிலி அறுந்திடும்
தங்கும் சமத்தன்மையும் விரிந்திடும்

பொங்கியே மனமும் அசைந்திடும் வேளை
எங்கெங்கு சாதகர் எண்ணம் செல்லினும்
எங்கும் நிறைந்திடும் சிவத்தின் தன்மை
அங்கங்கெல்லாம் உணர்ந்திடலாகும்

உலகில் எப்பொருளையும் உள்ளம் நாடிட
உன்மையில் அப்பொருள் உள் தன்மையாலே
உன்மை பரம்பொருள் தவிர வேறில்லை
என்றே பாவிக்க பூரணத்வம் பெருகும்

தும்மலில் பயத்தில் குழப்பமதனில்
துக்கத்தில், போரில் ஓடுமிடத்தில்
துளிர்த்திடும் ஏப்பத்தில் முதல் கணம்யாவும்
தூய பிரம்மத்தின் வெளிப்பாடாகும்

தன்னுடை நாடு, தன்னுடை வீடெனும்
எண்ணங்கள் ஏதும் மனதில் உதித்தால்
மனதைப் புறந்தள்ளி அதன் ஆதாரமழித்திட
கணந்தனில் முழுமுதல் தன்மையும் தோன்றும்

கணந்தனில் எப்பொருளிலும் பார்வையை பதித்து
குணம் மற்றும் உருவத்தின் நினைவுகளோடு
பார்வையை பொருளின் மீதிருந்து அகற்ற
பாவையே நீயும் சூனியமாவாய்.

பற்றற்ற சாதகர் எண்ணம் குவிக்கையில்
உற்றிடும் உள்ளுணர்வே சங்கரன் சக்தி
பற்றியே அதனை தொடர்ந்து தியானிக்க
மற்றங்கு சிவநிலை வெளிப்படலாகும்

பிரபஞ்சப் பொருளொன்றில் மனமது நிலைத்தால்
பிரபஞ்சத்தில் மற்றவை மறைந்திடக் காண்பார்
பிரபஞ்சத்தின் அவ்வகை மறைவை தியானிக்க
பிரபஞ்ச மூலமாம் சமநிலைதனில் ஆழ்வார்

தூய்மையும் அல்லதும் குறைமதிக்காகும்
தூய்மையும் அல்லதும் சிவமதில் இல்லை
ஆய்ந்திட வேற்றுமை யாவும் கடந்தே
தோய்ந்திடும் ஒருமையே சிவநிலையாமே

பைரவத் தன்மை எங்கும் நிறைதல்
பைரவம் அற்றொன்று அகிலத்தில் இல்லை
ஐயந்திரிபற்றே பாவிக்கும் சாதகர்
மெய்யுணர்வாம் ஒருமை நிலைதனை அடைவார்

சுற்றிடும் நட்பிலும் எதிர்ப்பிலும் நடுநிலை
போற்றலும் தூற்றலும் சமமெனும் உயர்நிலை
ஏற்றிங்கு உள்ளது பிரம்மமே என்றுணர்ந்து
பற்றிநிற்பவர் பரமானந்தம் அடைவரே

நன்பனென்றும் எதிரியென்றும் நாளும் நினையார்
நட்பு எதிர்ப்பின் இடை சமத்தன்மையில் திளைப்பார்
நட்பிற்கும் எதிர்ப்பிற்கும் நடுநிலை யதனில்
நன்னிடும் பிரம்ம நிலை விளங்கிடுமே

அறிபவை உணர்பவை கற்பனையாலே
அணுகிட முடியா சூனியம் யாவும்
அவனியில் பைரவம் என்றே பாவிக்க
அங்கே முகிழ்ந்திடும் ஞானமுமாமே

எங்கும் நிறைந்ததும், கணிக்கவொணாததும்
பங்கமிலாததுமாம் பரவெளியதனில்
பாங்காய் சித்தம் தனை பதித்திடுவார்
ஆங்கே உருவற்ற பிரம்மத்தில் நிலைப்பார்

மனதினில் எண்ணம் எழுந்திடும் போதில்
கணந்தனில் அதனை களைந்தெறிந்திடவே
மனமதும் ஆதாரமற்று முடங்கிடும்
மனதின் மயக்கும் ஆட்டம் நின்றிடும்

பைரவம் என்றிட பயமது விலகிடும்
பைரவத் தன்மை எங்கும் நிறைதல்
பைரவம் என்பது சகலமும் தருவது
பைரவம் எனும்சொல் சிவநிலை தருவது

நான் எனதென்றெலாம் வாதிக்கும் போது
நான் என்பதிலே பிரபஞ்சம் அடக்கிட
நான் என்பதுவும் நாதனாகிடும்
நான் எனும் மனமும் நாதியற்றிடும்

நிறைதல் விளங்குதல் மரணமற்றிருத்தல்
இறைத்தன்மை யாமிவை மீது தியானிக்க
மறையொலி போலும் சொல்லதன் பொருளும்
நிறைவாய் தந்திடும் பேரின்பம் தானே

தந்திர ஜாலக்காட்சியின் போதில்
வந்து மறைவது போன்றது உலகம்
சிந்தனை செய்திட உண்மை தெரிந்திடும்
சிந்தை உரம்பெற சிவமயம் தானே

மாற்றமிலாதது ஆத்மா என்றால்
மற்றிங்கு ஞானம் கர்மம் எங்ஙனம்?
பற்றற்று சிந்திக்க ஞானம் பிறக்கும்
சுற்றிடும் உலகம் சூனியம் என்பதாம்

பைரவத்தில் கட்டும் விடுதலையும் இல்லை
வையத்தில் நீரில் கதிரதன் பிம்பம் போல்
ஐயங்கொள் புத்தி விளைத்திடும் தொல்லை
பயங்கொள் கோழையை விரட்டிடும் ஒல்லை

பொறிவழி யறிவால் விளங்குதல் இல்லை
அறிவும் பொறிகளும் அகத்திற்குத் தொல்லை
பொறிகளின் செயல்தனை ஒடுக்கித் திருப்பிட
செறிவாம் தன்னுடைத் தன்மையில் நிலைப்பர்

சகலமும் அறிவது ஞானத்தால் ஆகும்
சகலமும் அறிந்தது மூலமே ஆகும்
சகலமும் அறிவதால் ஞானமே மூலம்
சகந்தனில் இவ்வாறே தியானித்தல் ஆகும்

தன்னுடை மனமும் தானெனும் உணர்வும்
தன்னுடை சக்தியும் தானெனும் எல்லையும்
மன்னும் இந்நான்கும் மங்கிட ஆங்கே
உண்மையாம் பைரவம் திண்ணமாய்த் திகழும்

செறிவுடை ஞானம் எய்திட உனக்கு
நெறியதும் நூற்றுப் பன்னிரண்டு ரைத்தேன்
நெறியதில் நின்றிட எண்ணங்கள் மாளும்
அறிவுடை மாந்தர் ஞானம் அடைவரே

இன்றிங்கு ரைத்திட்ட இவ்வழி எதிலும்
நின்றிடும் மாந்தர் பைரவமாவர்
மன்னுமிவ்வுலகில் ஞானியர் அவர்தாம்
சொன்னது எதுவும் பலித்திடல் ஆகும்.

செப்பிய நுட்பம் தப்பாது ஒழுகின்
மூப்பது அடையார் மரணமும் வெல்வார்
செப்புமென் சித்தியும் திண்ணமாய் அடைவார்
இப்புவியதனில் வினை கட்டழிப்பார்

ஐயந்திரிபற நுட்பம் விளக்கிய
பைரவர் மலரடி பணிந்தே பைரவி
வையத்துள்ளோர் வளம்பெற்றிடவே
ஐயங்கள் தானே எழுப்பினள் தொடர்ந்து

தேவி உரைத்தாள்

பைரவத் தன்மை இதுவேயா மெனில்
ஐயனே இங்கு யார்தான் ஜபிப்பது?
வையத்துள்ளோர் எதனை ஜபிப்பர்?
செய்யத் தகுந்த பூசனை தானெது?

செய்திடும் பூசனை ஏற்பவர் யாவர்?
நெய்சொரி வேள்விகள் யாரை குறித்து?
மெய்யாய்  இவற்றின் செயல்முறை யாது?
பைரவத் தேவே கூறியருள்வீர்

திடவிசும்பு எரிவளி நிலநீர் இவைமிசை
உடலொடு உயிரென உள்நிற்கும் பைரவர்
உடனுறை தேவிக்கு உதித்திட்ட ஐயம்
உடனே தீர்த்திட உரைசெய்திட்டாரே

மலர் முகமுடைய தேவி
உலகத்தார் செயுமிவை யாவும்
பல சூக்கும உருவகங்கள்
சில பல பலனும் ஈனும்

சிரத்தையாய் ஞானம் தேடிடும் சாதகர்
பரத்தில் தான் கலந்ததாய் பாவித்தல் ஜபமே
அகத்தில் எழுந்திடும் பிறவாப் பேரொலி
செகமதன் மந்திரக் கருப்பொருள் ஆகும்
இகத்தில் செயத்தக்க ஜபமும் இதுவே

புத்தியும் தெளிய - உருவங்கள் மறைந்தே,
சித்தமும் அசைவற - சிந்தனை அற்றே,
தத்துவம் விளங்கும் தியானமும் இதுவே
சித்சக்திக் குருவங்கள் கற்பித்தல் வீணே

மலரிடு பூசனை வழிபாடாகா
மனமது சூனியம் தனில் லயித்திடுதல்
மகத்துவம் மிக்க பூசனையாகும்
மனமதன் இருப்பும் கரைந்தே ஏகும்

செப்பிய வழிகளில் சிரத்தையோடிருக்க
அப்பொழு தேற்படும் அனுபவம் யாவும்
தப்பின்றி வளர்ந்தே ஞானமும் நல்கிடும்
இப்புவி வாழ்வில் த்ருப்தியும் தந்திடும்

விழிப்புணர்வே நெய்சொரி கருவியாய்
விழி முதல் பொறிகள் யாவற்றையுமே
அழிவிலா சூனியமாம் பெரு நெருப்பதனில்
பொழிதலே வேள்வியாம் விரியுலகதனில்

தேவி பார்வதி, பாருலகிதிலே
தெவிட்டா ஆனந்தம் த்ருப்தியுமே தான்
அவியுணவாகிடும் அகவேள்வியிலே
புவியில் பாவங்கள் அதில் அழிந்திடுமே

வியனுலகிதிலே வியத்தகு பாவனை
லயமடைந்திடுதல் சிவமொடுதானே
பயனென்ன பல்வகை பூசனையாலே
செயலதில் த்ருப்தி அடைபவர் யாரே?

ஆத்மாவின் இயல்பே ஆனந்தந் தானே
ஆனந்தம் நிலைப்பது விழிப்புணர்வாலே
ஆத்மாவில் நிலைத்தலே ஆனந்தக்குளியல்
ஆங்கே அழிந்திடும் தொடர்வினைக்குவியல்

தொழுவார், தொழுவினை, தொழுதெழு மாந்தர்
தொழுதிடும் இறைசக்தி எல்லாம் ஒன்றே
பழுதிலா தியான முறைதனை பயில்வார்
முழுமையாம் பேருண்மை இதனை உணர்வார்

பாயும் ப்ராண அபான வாயுவும்
பாதை மாறிடும் குண்டலி யதனால்
பரந்தெங்கும் தேவியவள் நின்றிடவே
கரந்திடும் தலமாய் உடலாகிடுமே

இவ்விதப் பாதையே பரமானந்தம்
இவ்வழி உலகில் பயிலும் சாதகர்
திவ்விய தேவியின் திருவருளாலே
செவ்விய பைரவத் தன்மை அடைவரே

ஸாவென வொலிக்கும் வெளிவரு மூச்சு
ஹாவென் றொலிக்கும் உள்வரு மூச்சு
ஹம்ஸ ஹம்ஸ மெனும் இம்மந்திரம்
உலக மாந்தர் யாவரும் ஜபிப்பதாம்

உரைத்த மந்திரம் உலக மாந்தர்
உணராதிருப்பினும் ஒவ்வொரு நாளும்
இருபத்தோராயிரத் தறுநூறு முறைதான்
உருவேற்றுகின்றார்- சுலப வழியிது.

செப்பிய இந்த நுட்பங்கள் யாவும்
தப்பிலா தானந்தம் தருபவை யாகும்
ஒப்பிலா மரணத்தை கடந்திட லாகும்
எப்பிறவியிலும் தொடர்ந்திவை ஏகும்

சித்தம டக்காதவர் சீடரல்லாதவர்
இத்தரணியிலே கொடுமைகள் செய்வார்
பித்தர் சூதர் தூர்த்தரோ டிசைவார்
இத்தகு மாந்தர்க்  குரைத்தல் தகாது

சிந்தை யடக்கியோர் சீரிய மாந்தர்
விந்தை யுலகின் பந்தங்கள் துறந்தார்
வந்தனை செயத்தக்க ஒழுக்க சீலர்கள்
இந்த நுட்பங்களுக் கேற்றவராவர்

மன்னுமிவ் வுலகின் மாண்புகள் யாவும்
தோன்றி மறையும் தன்மையதாகும்
பண்ணிசை பைரவி, உரைத்தவை யாவும்
என்றும் மாற்ற மிலாதவை யாகும்

உயரிய நுட்பங்கள் இவைதனை யறிய
உயிரையும் மாந்தர் துறந்திடலாகும்

உரைத்த பைரவர் உடனுரை தேவி
உணர்ந்த உண்மைகள் உள்ளம் நிறைத்திட
உதித்த தன்னையங்கள் உதிர்ந்தே ஏகிட
உவகை பொங்கிட உரை செய்தனளே

இறையே! சங்கர! மூலமுதலே!
நிறைவெய்தினன் யான் - நன்றியுமக்கு
மறையாம் ருத்திர யாமளம் தெளிந்தேன்
குறைவின்றி சக்தி நுட்பங்கள் அறிந்தேன்

இதயம் நிறைந்து இன்மொழி உதிர்த்து
இறைவியும் சிவத்தொடு ஒன்றெனக் கலந்தனள்

**இந்த நூலாசிரியரின் மற்ற நூல்கள்**

**தமிழில்**

**முண்டக உபநிடதம்**

**மாண்டூக்ய உபநிடதம்**

**தைத்திரீய உபநிடதம்**

**ஈசா உபநிடதம்**

**கேன உபநிடதம்**

English commentary by this author

Kena Upanishad

Taithriya Upanishad

Mandukya Upanishad

Isa Upanishad

Mundaka Upanishad

Other works:

**Any time meditation**
**Finger tip wonders**
**and many more. Please**
**visit website for more details.**